Licensed to Post Without Pre-Payment Licence No G 61 N MS CPP 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# வெங்கட்ராமன் வெற்றி உறுதி

Regd No. TN - MS [C] 244 Phone: 420212 4 பக்கம் விலை 70 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 11 சென்னை 16 7 87 வியாழன் வெளியூர் வெள்ளி 17 7 87 இதழ் 266

## புரட்சித்தலைவரின் வேட்பாளர் ஆர்.வி. அதிக ஓட்டுக்கள் பெற்றார்

### புதிய ஜனாதிபதியாக 25ந்தேதி பதவி ஏற்பு



**புதுடெல்லி, ஜூலை 16- ஜனாதிபதி தேர்தலில் ஓட்டுக்கள் இன்று எண்ணப்பட்டன. புரட்சித் தலைவரின் வேட்பாளர் ஆர். வெங்கட்ராமனுக்கு அதிக ஓட்டுக்கள் கிடைத்துள்ளன. அவர் வெற்றி உறுதியாகிவிட்டது. புதிய ஜனாதிபதியாக ஆர். வி. ஜூலை 25ந் தேதி பதவி ஏற்பார்.**

ஜனாதிபதி தேர்தலுக்கான வாக்குப்பதிவு கடந்த 13ந்தேதி நடைபெற்றது.

இந்தியா முழுவதிலும் மாநில தலைநகர்களில் இருந்து ஓட்டுப்பெட்டிகள டெல்லிக்குக் கொண்டு வரப்பட்டிருந்தன.

இன்றுகாலை 11-30 மணிக்கு பாராளுமன்ற கட்டிடத்தில் வாக்குகள் எண்ணும் பணி தொடங்கியது.

நாடாளுமன்றசெயலாளரும் தேர்தல் அதிகாரியுமான டாக்டர் சுபாஷ் கஷ்யாப் முன்னிலையில் ஓட்டுபெட்டிகள் மாநிலப் பெயர்களின் அகரவரிசைப்படி திறக்கப்பட்டன.

ஜனாதிபதி தேர்தலில் போட்டியிட்ட ஆர் வெங்கட்ராமன், கிருஷ்ணய்யர், மிதிலேஷ்குமார ஆகிய 3 வேட்பாளர்களுக்கும் தனித்தனியாக பெட்டிகள் வைக்கப்பட்டு அவரவர்களுக்கு கிடைத்த வாக்குகள் பிரித்துப் போடப்பட்டன.

அதன்பிறகு வாக்குகள் எண்ணும் பணி தொடங்கியது வாக்குகள் எண்ணும இடத்திற்கு வெளியே 80 டெலிவிஷன் பெட்டிகள் வைக்கப்பட்டு இருந்தன.

முதலில் ஆந்திர மாநில ஓட்டுக்கள் எண்ணப்பட்டன தொடர்ந்து வாக்குகள் எண்ணப்பட்டன.

ஆர். வெங்கட்ராமனுக்கு ஓட்டு எண்ணிக்கை ஏஜெண்டாக முரளி பண்டாரேயும் கிருஷ்ணய்யரின் ஏஜெண்டாக வினோத்சேத்தியும்இருந்தனர்.

சட்டமன்ற உறுப்பினர்களின் ஓட்டுக்கள் முதலில் எண்ணப்பட்டன பின்னர் எம் பி க்களின் ஓட்டுக்கள் எண்ணப்பட்டன முதலில் ஆந்திர எம்எல்ஏக்களின் ஓட்டுக்கள் எண்ணப்பட்டன அதில் கிருஷ்ணய்யருக்கே அதிக ஓட்டு இருந்தது

(கிருஷ்ணாய்யர் 217 ஆர், வி 58 செல்லாதது 6 ஓட்டு)

அருணாசல பிரதேசத்தில் ஆர் விக்கு 28 ஓட்டுகளும் கிருஷ்ணய்யருக்கு ஒரு ஓட்டும் கிடைத்தன ஒரு ஓட்டு செல்லாததாகிவிட்டது.

பின்னர் படிப்படியாக ஆர்-விக்கு அதிக ஓட்டுக்கள் கிடைத்து முன்னணியில் நின்றார்.

இன்று மாலை முடிவுகள் அதிகாரபூர்வமாக அறிவிக்கப்படும்.

ஆர். வெங்கட்ராமன் தேர்ந்தெடுக்கப்படுவது உறுதி எனக் கூறப்படுகிறது.

### ஜனாதிபதி தேர்தல் ஓட்டு நிலவரம்

**ஆந்திர மாநிலம்**

| | |
|---|---|
| ஆர். வெங்கட்ராமன் | 58 |
| வி.ஆர். கிருஷ்ணய்யர் | 217 |
| செல்லாதவை | 6 |
| ஆந்திர ஓட்டுக்களின் மதிப்பு: | |
| ஆர் வெங்கட்ராமன் | 8584 |
| கிருஷ்ணயயா | 32116 |

**அருணாசல பிரதேசம்**

| | |
|---|---|
| ஆர். வெங்கட்ராமன் | 28 |
| கிருஷ்ணய்யா | 1 |
| செல்லாதது | 1 |

### அசாம்

ஜனாதிபதி தேர்தலில் அசாம் எம் எல் ஏக்களின் ஓட்டுகளில் கிருஷ்ணய்யருக்கு 72 ஓட்டுகளும ஆர் விக்கு 25 ஓட்டுக்களும் கிடைத்தன 8 ஓட்டுக்கள் செல்லாதவை ஒரு ஓட்டின் மதிப்பு 116.

### பீகார்

பீகார் மாநில எம்எல் ஏக்களில் 207 பேர் ஆர். வெங்கட்ராமனுக்கு ஓட்டளித்துள்ளனர்.

கிருஷ்ணய்யருக்கு 73 ஓட்டுக்களே கிடைத்தன

ஆர் வெங்கட்ராமனுக்கு கிடைத்துள்ள ஓட்டுக்களின் மதிப்பு 39,498

கிருஷ்ணய்யருக்கு கிடைத்த ஓட்டுக்களின் மதிப்பு 12,702

### யாதவ்-பண்ருட்டி சந்திப்பு

சென்னை, ஜூலை 16- மத்திய அமைச்சர் யாதவ் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனை இன்று கோட்டையில் சந்தித்து பேசினார்.

### ஈழத்தமிழரை காப்பாற்றுக:

# பிரதமர்ராஜீவ்காந்திக்கு புரட்சிதலைவர் கடிதம்

சென்னை, ஜூலை 16- இலங்கை ராணுவத்தினர் மீண்டும் தாக்குதலுக்கு தயாராகிறார்கள் அப்பாவித் தமிழ் மக்களுக்கு ஆபத்து வந்து கொண்டிருக்கிறது. இதில் உடனடியாக மத்திய அரசு தலையிட வேண்டும் என்று பிரதமர் ராஜீவுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் கடிதம் எழுதியுள்ளார். இத்தகவலை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்

முதல்வர் புரட்சித் தலைவர் பிறந்த நாள் விழாவும் கழக சாதனை விளக்கப் பொதுக் கூட்டமும் எழும்பூர் தொகுதி ஓட்டேரி செல்லப்ப முதலித் தெருவில் பிருமாண்டமான அளவில் நடைபெற்றது. அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூட்டத்தில் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார்.

பேரறிஞர் அண்ணாவும் முதல்வர் புரட்சித்தலைவரும் நின்று கொண்டிருப்பது போன்றவண்ண விளக்குகளால் அலங்காரம் செய்யப்பட்டிருந்த 45 அடி உயர அலங்கார உருவம் அனைவரின் கருத்தை கவரும் வகையில்இருந்தது

கூட்டத்திற்கு பொன் மனச்செம்மல் எம்.ஜி.ஆர் மன்றச்செயலாளர் பி.கே சேகர்பாபு தலைமை வகித்தார்.

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசும் போது கூறியதாவது:-

முதல்வர் புரட்சித் தலைவர் இந்திய துணைக் கண்டத்தில் பிரமிக்கத்தக்க தலைவராக விளங்கி வருகிறார அடைகாக்கும் கோழியின் பார்வை அக்கம் பக்கத்தில் இருந்தாலும் கவனம் முட்டையின மீது தான் இருக்கும கடலிலே கப்பல் சென்றாலும் கலங்கரை விளக்கத்தை நோக்கித்தான் அது செல்லும் அதுபோல புரட்சித்தலைவர் போடும் திட்டங்கள்எல்லாம் ஏழை மக்களின் நல்வாழ்வை அடிப்படையாகக்கொண்டு தான் இருக்கும்.

### புரட்சித்தலைவர் வேட்பாளர்

அண்மையில் குடியரசு தலைவர் தேர்தல் நடைபெறறது. யாரை வேட்பாளராக போடலாம என பிரதமர் ராஜீவ்காந்தி புரட்சித்தலைவரை கேட்டார் யார் வந்தால் உங்களுக்கு ஒத்துழைப்பு தருவார்களோ அவரை போடுங்கள் என்றார் புரட்சித் தலைவர் புரட்சித்தலைவரிடம் பல பெயர்களை ராஜீவ்காந்தி சொன்னார் அவர் வேண்டாம ஆர் வியை போடுங்கள்என்றுபுரட்சித் தலைவர் சொன்னார்.

அதனை அந்த நேரத்தில் சொல்லக்கூடாது என்று பத்திரிகையாளர்களிடம் தெரிவிக்கவில்லை பிரதமர் தான் அதனை தெரிவிக்கவேண்டும் என்பதற்காகத்தான் அப்படி செய்தோம்.

ஒன்னே ஒன்று கண்ணே கண்ணு என்று தமிழ்பேசும் ஒருவர் ஜனாதிபதியாகும் வாய்ப்பு கிடைத்துள்ளது தமிழினத்தலைவர் என்று சொல்லும் கருணாநிதி என்ன சொல்லி இருக்க வேண்டும்? அவருக்கு ஓட்டு போடுங்கள் என்று சொல்லி இருக்கவேண்டும்

இலங்கைக்கு ராணுவத்தை அனுப்பு என்று கருணாநிதி சொன்னபோது அது முட்டாள்தனம் என்று ஆர். வி சொன்னாராம் கருணாநிதி சொல்வது பின்பு எப்படி இருக்கும்?

ரேடியோவிலும், பத்திரிகையிலும் செய்தி சொல்லிவிட்டா ராணுவத்தை அனுப்புவார்கள்? இதுகூட என்ன புராண காலம என்று நினைத்துவிட்டாரா கருணாநிதி.

### கருணாநிதியின் மனநோய

கருணாநிதி நடத்தும் அரசியல் மனநோய் அரசியல் குறைபாடுகளை சொல்லுங்கள் பதில் சொல்லுகிறோம்.

ஒரு மாநிலத்தின் முதல்வருக்கு உடல்நிலை சரியில்லாமல் இருந்து, இப்போது பரவாயில்லை என கிறபோது மகிழ்ச்சிதானே வரவேண்டும்? மனம் நல்ல நிலையில் இருப்பவர்களுக்கு மகிழ்ச்சி வரும் மன நோயாளியான கருணாநிதிக்கு எப்படி மகிழ்ச்சி வரும்?

ஆளுநர் முதல்வரை சந்தித்ததுடன் கருணாநிதி ஆளுநர் மீது பாய்கிறார் இவர் என்ன ஆளுநரா? ஆடுநரா என்று கேட்கிறார்.

10எம் எல் ஏக்களை நீக்கியது செல்லும் என்று நீதிபதி சொன்னபோது நீதிதேவதை கண்ணை கட்டிக்கொண்டு இடது கையால்பெற்றுக்கொண்டு வலதுகையால் தீர்ப்பு எழுதுகிறாள் என்கிறார்.

இப்போது காவல் துறையை தாக்குகிறார். என் உயிருக்கு ஆபத்து வந்தால் நீங்கள்தான் பொறுப்பு உயர் அதிகாரிதான் பொறுப்பு என்று பேசுகிறார்

### நொண்டி மிரட்டல்

வண்டிக்காரன் ஒருவன் போவோர் வருவோரை எல்லாம் மிரட்டி பணம் பறித்துக்கொண்டு இருந்தானாம அங்கு ஒருவன் எழுந்துவந்து 'டேய்' என்றானாம அப்போது தான் தெரிந்தது அவன்நொண்டி என்று அது போலதான கருணாநிதி இப்போது மிரட்டி வருகிறார் ஒவ்வொரு முறையும்தான் நீங்கள் நொண்டி என்று புரட்சித்தலைவர் மக்களுக்கு காட்டி வருகிறாரே அதன் பிறகு ஏன் இந்த மிரட்டல்?

அரசியல் என்பது தொடர்ந்து நடைபெறும் பயணம் நல்ல தன்மையை அதில் வளர்க்க வேண்டும் தனக்கு வேண்டாதது எதுவாக இருந்தாலும் அதனை தாக்குவது என்ற நிலைக்கு கருணாநிதி வந்து விட்டார். ஆட்டை கடித்து மாட்டை கடித்து கடைசியில் மனிதனையே கடிக்கக்கூடிய நிலைக்கு வந்துவிட்டான் என்று கூறுவார்கள், அதுபோல கருணாநிதி இப்போது கூட இருக்கும் வீரமணியையே கடிக்க ஆரம்பித்து விட்டார். கம்யூனிஸ்டு கட்சியின் பிளவுக்கும் கருணாநிதி தான் காரணம். ஒரு கட்சியுடன் கருணாநிதி கூட்டு சேர்ந்தால் அந்தகட்சியை உருபட வைக்கமாட்டார இனிமேல் கருணாநிதியுடன் தோழமை கொள்ளும் கட்சிகள் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும

சமீபத்தில் மத்திய நீர்பாசனத்துறை அமைச்சர் சங்கரானந்த் முதல்வரை சந்தித்தார அப்போது நானும் உடன் இருந்தேன.

### சங்கரானந்த் பாராட்டு

உங்கள் காலத்தில் தமிழரை குடியரசு தலைவராக்கி உள்ளீர்கள் இதனை விட வேறு என்னசாதனை வேண்டும் என்று புரட்சித் தலைவரிடம் சங்கரானந்த சொன்னார் உடனே புரட்சித்தலைவர் தமிழரை குடியரசு தலைவராக ஆக்கும் பெருமை எனக்கு அல்ல அது பிரதமருக்குத்தான் சேரும் என்றார் இதனை விட வேறு என்ன விளக்கம் வேண்டும்?

இலங்கையில் உள்ள தமிழ்மக்கள் எம் ஜி.ஆர். வாழ்க என்று சொல்லுகிறார்கள். டெசோ மாநாடு நடத்தி. நான் தான் உண்மையான தமிழன என்று சொல்லி நிதி சேர்த்து அரசியல் நடத்திய கருணாநிதியை வாழ்க என்று ஏன்சொல்லவில்லை? மாவின் தன்மை பணியாரத்தில் தெரியும் என்பார்கள் அதுபோலத் தான் இதுவும்

கருணாநிதி தன் ஐப்புலன்களையும அடக்கிக் கொண்டு இருக்கவேண்டும் இதுதான் இலங்கைத் தமிழருக்கு அவர்செய்யக் கூடிய மிகப்பெரிய நன்மையாகும்.

இலங்கை தமிழருக்கு மிகப்பெரிய எதிரி இலங்கை அரசாங்கம்தான் அதனை எதிர்த்து இதுவரை கருணாநிதி பேசி இருக்கிறாரா?

### பிரதமருக்கு கடிதம்

இரண்டு தினங்களுக்கு முன் புரட்சித்தலைவர் பிரதமருக்கு கடிதம் எழுதியுள்ளார் இலங்கை ராணுவத்தினர் மீண்டும்தாக்குதலுக்கு தயாராகிறார்கள். அப்பாவித்தமிழ்மக்களுக்கு ஆபத்து வந்து கொண்டிருக்கிறது இதில் உடனடியாக இந்திய அரசு ஈடுபட வேண்டும என்றுஅந்த கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

24 மணி நேரமும்நாட்டு மக்களுக்கு நன்மை செய்பவருக்கு ஒத்துழைப்பு கொடுக்கவில்லை என்றாலும் உபத்திரவம் கொடுக்காமல் இருக்க வேண்டும்.

அரசியலில் வெறுப்பையும் வன்முறையையும் தூண்டி விடுகிறார்கள் தன காரணமாகத்தான பேருந்தில் ஒருடிரைவரை கொலை செய்யும் நிலை வந்துள்ளது.

இப்போது திமுகவில் கருணாநிதிக்கு முதல் இடமும் மாறனுக்கு இரண்டாவது இடமும் முகஸ்டாலினுக்குமூன்றாவது இடமும் இருக்கிறது பேராசிரியருக்கு அதற்கு அடுத்த இடம் தான் உள்ளது கருணாநிதியையும அவரது வாரிசையும் ஏற்காதவர்கள் அந்த கட்சியில் இருக்கமுடியாது.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசினார்.

கூட்டத்தில் சென்னை மாவட்ட எம். ஜி ஆர். மன்றச் செயலாளர் மதுசூதனன், மத்தியசென்னை எம் ஜி ஆர் இளைஞர் அணி துணைச்செயலாளர் பாகைங்கா, எழும்பூர் பகுதி எம் ஜி ஆர் இளைஞர் அணி செயலாளர் மோகன் முத்தரசன், ராஜபாண்டியன மற்றும் பலர் பேசினர்

கூட்டத்திற்கான ஏற்பாடுகளை சேகர்பாபு மற்றும் புரட்சித்தலைவர் எம் ஜி ஆர் மன்றத்தைச் சேர்ந்த இராகவன் இராசா, யுவராஜ் கோபி துரை ஆகியோர் சிறப்பாகச் செய்திருந்தனர்.



**தலைமைக் கழக அறிவிப்பு**

டாக்டர்

# புரட்சித்தலைவர்

அவர்களின்

## முக்கிய அறிவிப்பு

திரு. எஸ். இராகவானந்தம் அவர்கள்

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் துணைப் பொதுச்செயலாளராக நியமிக்கப்படுகிறார்

இன்று முதல் அவர் கழகத்தின் மூத்த துணைப் பொதுச் செயலாளராக செயல்படுவார்.

திரு. எஸ். இராகவானந்தம் அவர்களும்

டாக்டர் எச். வி. அண்டே அவர்களும்

டாக்டர் கா. காளிமுத்து அவர்களும்

கழகத்தின் மூன்று துணைப் பொதுச்செயலாளர்களாக செயல்படுவார்கள்.

எம். ஜி. இராமச்சந்திரன்,
கழக நிறுவனத்தலைவர்-கழகப் பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்

சென்னை-14
16-7-1987

**தலைமைக் கழக அறிவிப்பு**

# இதயதெய்வம் புரட்சித்தலைவர்

## பிறந்தநாள் விழா மற்றும் புரட்சித்தலைவர்

தமிழகத்தின்முதல்வராக ஆட்சிப் பொறுப்பினை ஏற்று 10 ஆண்டுகள் நிறைவு பெற்று முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் அமைந்த கழக அரசு பதினொன்றாம் ஆண்டில் வெற்றிகரமாக அடியெடுத்து வைப்பதை யொட்டி பொற்கால ஆட்சி படைத்த புரட்சித்தலைவர் அரசு 10 ஆண்டுகளில் ஆற்றிய அரும் பெரும் பணிகள் பற்றிய

## சாதனை விளக்க பொதுக்கூட்டங்கள்

### 16-7-1987 வியாழக்கிழமை

புதுஆயக்குடி
சிறப்புரை
திருமதி கவிநிலவு
எம் ஏ பி லிட் எம் எட் அவர்கள்
திரு கே குப்புசாமி
எம் எல் ஏ அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச் செயலாளர்
திரு வி ஆர் ராஜாங்கம்
அவர்கள்
அண்ணா மாவட்ட எம் ஜி ஆர்
இளைஞர் அணிச் செயலாளர்
கலைநிகழ்ச்சி
மதுரை திரு பாவலர்
சாமிநாதன் ரஞ்சனி கலைக்குழுவினர்

### 17-7-1987 வெள்ளிக்கிழமை

ருக்குவார்பட்டி
சிறப்புரை
திரு திருச்சி அரிகிருஷ்ணன்
அவர்கள்
திரு கே குப்புசாமி
எம் எல் ஏ அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச் செயலாளர்
திரு வி ஆர் ராஜாங்கம்
அவர்கள்
அண்ணா மாவட்ட எம் ஜி ஆர்
இளைஞர் அணிச் செயலாளர்
கலை நிகழ்ச்சி
மதுரை திரு பாவலர்
சாமிநாதன் - ரஞ்சனி கலைக்குழுவினர்

### 18-7-1987 சனிக்கிழமை

பாலசமுத்திரம்
சிறப்புரை
திரு திருச்சி அரிகிருஷ்ணன்
அவர்கள்
திரு கே குப்புசாமி
எம் எல் ஏ அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச்செயலாளர்
திரு வி ஆர் ராஜாங்கம்
அவர்கள்
அண்ணா மாவட்ட எம் ஜி ஆர்
இளைஞர் அணிச்செயலாளர்
கலைநிகழ்ச்சி
மதுரை திரு பாவலர்
சாமிநாதன் ரஞ்சனி கலைக்குழுவினர்

### 19-7-1987 ஞாயிற்றுக்கிழமை

கோதைமங்கலம்
சிறப்புரை
திரு நெல்லை பாலாஜி
அவர்கள்
திரு கே குப்புசாமி
எம் எல் ஏ அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச் செயலாளர்
திரு வி ஆர் ராஜாங்கம்
அவர்கள்
அண்ணா மாவட்ட எம் ஜி ஆர்
இளைஞர் அணிச்செயலாளர்
கலை நிகழ்ச்சி
மதுரை திரு பாவலர்
சாமிநாதன் ரஞ்சனி கலைக்குழுவினர்

### 20-7-1987 திங்கட்கிழமை

அ கலையம்புத்தூர்
சிறப்புரை
திரு திருச்சி அரிகிருஷ்ணன்
அவர்கள்
திரு கே குப்புசாமி
எம் எல் ஏ அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச்செயலாளர்
திரு வி ஆர் ராஜாங்கம்
அவர்கள்
அண்ணா மாவட்ட எம் ஜி ஆர்
இளைஞர் அணிச் செயலாளர்
கலைநிகழ்ச்சி
மதுரை திரு பாவலர்
சாமிநாதன் ரஞ்சனி கலைக்குழுவினர்

### 21-7-1987 செவ்வாய்க்கிழமை

நெய்க்காரப்பட்டி
சிறப்புரை
புலவர் சிற்றரசு
அவர்கள்
திரு கே குப்புசாமி
எம் எல் ஏ அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச் செயலாளர்
திரு வி ஆர் ராஜாங்கம்
அவர்கள்
அண்ணா மாவட்ட எம் ஜி ஆர்
இளைஞர் அணிச் செயலாளர்
கலைநிகழ்ச்சி
மதுரை திரு பாவலர்
சாமிநாதன் ரஞ்சனி கலைக்குழுவினர்

### 22-7-1987 புதன்கிழமை

வடக்கு தாதநாயக்கன்பட்டி
சிறப்புரை
திரு திருச்சி அரிகிருஷ்ணன்
அவர்கள்
திரு கே குப்புசாமி
எம் எல் ஏ அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச் செயலாளர்
திரு வி ஆர் ராஜாங்கம்
அவர்கள்
அண்ணா மாவட்ட எம் ஜி ஆர்
இளைஞர் அணிச்செயலாளர்
கலை நிகழ்ச்சி
மதுரை திரு பாவலர்
சாமிநாதன் ரஞ்சனி கலைக்குழுவினர்

### 23-7-198 வியாழக்கிழமை

பாப்பம்பட்டி
சிறப்புரை
திரு திருச்சி அரிகிருஷ்ணன்
அவர்கள்
திரு கே குப்புசாமி
எம் எல் ஏ அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச்செயலாளர்
திரு வி ஆர் ராஜாங்கம்
அவர்கள்
அண்ணா மாவட்ட எம் ஜி ஆர்
இளைஞர் அணிச் செயலாளர்
கலைநிகழ்ச்சி
மதுரை திரு பாவலர்
சாமிநாதன் ரஞ்சனி கலைக்குழுவினர்

### 24-7-1987 வெள்ளிக்கிழமை

காவலப்பட்டி
சிறப்புரை
திரு திருச்சி அரிகிருஷ்ணன்
அவர்கள்
திரு கே குப்புசாமி
எம் எல் ஏ அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச் செயலாளர்
திரு வி ஆர் ராஜாங்கம்
அவர்கள்
அண்ணா மாவட்ட எம் ஜி ஆர்
இளைஞர் அணிச்செயலாளர்
கலைநிகழ்ச்சி
மதுரை திரு பாவலர்
சாமிநாதன் ரஞ்சனி கலைக்குழுவினர்

### 25-7-1987 சனிக்கிழமை

ஆண்டிபட்டி
சிறப்புரை
திரு. திருச்சி அரிகிருஷ்ணன்
அவர்கள்
திரு கே குப்புசாமி
எம்.எல்.ஏ. அவர்கள்
அண்ணா மாவட்ட கழகச் செயலா
திரு வி ஆர் ராஜாங்கம்
அவர்கள்
(அண்ணா மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணிச் செயலாளர்)
கலை நிகழ்ச்சி
மதுரை திரு பாவலர் சாமிநாதன் ரஞ்சனி
கலைக்குழுவினர்
கூட்டங்கள் ஏற்பாடு
திரு டி செல்லச்சாமி
அவர்கள்
பழனி ஒன்றிய எம் ஜி ஆர் இளைஞர் அணித்தலைவர்
திரு எஸ் கே கே ஹக்கீம்
அவர்கள்
பழனி ஒன்றிய எம் ஜி ஆர் இளைஞர் அணிச்
செயலாளர்

---

### 18-7-1987 சனிக்கிழமை

திருச்சி நகரம்
சிறப்புரை
அமைச்சர் திரு எஸ் திருநாவுக்கரசு
எம் ஏ பி எல் அவர்கள்
திரு பாளை திருநாவுக்கரசு
பி ஏ அவர்கள்
தலைவர்-திருச்சி மாவட்ட கூட்டுறவு பால்
உற்பத்தியாளர்கள் ஒன்றியம்
திரு என் நல்லுசாமி
எம் எல் ஏ அவர்கள்
திருச்சி மாவட்டக் கழக இணைச்செயலாளர்
திரு எஸ் புருஷோத்தமன்
எம் எல் ஏ அவர்கள்
திரு எம் அண்ணாதாசன்
எம் எல் ஏ அவர்கள்
திரு க சோலைராசு
எம் எல் ஏ அவர்கள்
திரு ஆர் சரோஜா
எம் எல் ஏ அவர்கள்
கூட்ட ஏற்பாடு
திரு ஜே தேவதாஸ்
அவர்கள்
திருச்சி நகரகழகச் செயலாளர்
திரு எ இளவரசன்
எம் ஏ எம் எல் அவர்கள்
திருச்சி மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணிச்
செயலாளர்

---

### 25-7-1987 சனிக்கிழமை

போகலூர் ஒன்றியம்
பரமக்குடி தொகுதி
இராமநாதபுரம் மாவட்டம்
சிறப்புரை
அமைச்சர்
திரு அ அருணாசலம்
அவர்கள்
திரு ஆ பாலுச்சாமி
எம் எல் ஏ அவர்கள்
பரமக்குடி தொகுதி சட்டமன்ற உறுப்பினர்
திரு மு தென்னவன்
பி. ஏ அவர்கள்
இராமநாதபுரம் மாவட்ட கழகச்செயலாளர்
கூட்ட ஏற்பாடு
திரு என் சந்திரன்
அவர்கள்
போகலூர் ஒன்றிய கழகச் செயலாளர்
திரு எஸ் ஆறுமுகம்
அவர்கள்
செயலாளர் புரட்சித்தலைவர் எம் ஜி ஆர் மன்றம்
திரு ஏ கோவிந்தன்
அவர்கள்
போகலூர் ஒன்றிய எம்ஜிஆர் இளைஞர் அணிச்
செயலாளர்

---

### 25-7-1987 சனிக்கிழமை

திண்டிவனம் நகரம்
தென் ஆற்காடு மாவட்டம்
சிறப்புரை
திரு. எஸ். ஆர். இராதா
அவர்கள்
தலைவர் தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம்
திரு. மானகிரிபாண்டியன்
அவர்கள்
கலை நிகழ்ச்சி
திரு சதாசிவம் சாந்தா கலைக்குழுவினர்
கூட்ட ஏற்பாடு
டாக்டர் பி.கணேசன்
அவர்கள்
திண்டிவனம் நகர கழகச்செயலாளர்

---

### 26-7-1987 ஞாயிற்றுக்கிழமை

ஆத்தூர் நகரம்
சேலம் மாவட்டம்
சிறப்புரை
இலட்சிய நடிகர் திரு. எஸ். எஸ். இராஜேந்திரன்
அவர்கள்
கூட்ட ஏற்பாடு
திரு. ஏ டி. அர்ச்சுணன்
அவர்கள்
ஆத்தூர் நகர மன்ற உறுப்பினர்
திரு. ஏ. செல்வராசு
அவர்கள்
புரட்சித்தலைவர் எம் ஜி. ஆர் மன்றம்
ஆத்தூர்
திரு. கே கிருஷ்ணன்
அவர்கள்
(ஆத்தூர் நகர 7-வது வார்டு கழகச்செயலாளர்)
ஆத்தூர்

---

### 26-7-1987 ஞாயிற்றுக்கிழமை

புதுக்குடி
பரமக்குடி ஒன்றியம்
இராமநாதபுரம் மாவட்டம்
சிறப்புரை
அமைச்சர் திரு டி இராமசாமி
அவர்கள்
திரு மு தென்னவன்
பி ஏ அவர்கள்
(இராமநாதபுரம் மாவட்டக் கழகச்செயலாளர்)
கூட்ட ஏற்பாடு
திரு என் இராமகிருஷ்ணன்
அவர்கள்
(பரமக்குடி ஒன்றிய கழகச் செயலாளர்)

---

### 27-7-1987 திங்கட்கிழமை

புதுக்கோட்டை நகரம்
சிறப்புரை
அமைச்சர் திரு. ஆர் சவுந்தரராசன்
பி காம அவர்கள்
கூட்ட ஏற்பாடு
திரு. எஸ்.ரகுபதி.
பி எஸ்ஸி பி எல் அவர்கள்
(புதுகோட்டை மாவட்ட கழகச்செயலாளர்)
திரு டி மாரிமுத்து
எம எல்.ஏ அவர்கள்

**ஜெயலலிதா எம். பி.**
கொள்கைபரப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா திமுகழகம்

சென்னை-24
16 7-1987

---

# காங்கிரசிலிருந்து அருண்நேரு-சுக்லா-ஆரீப்கான் நீக்கம்

புதுடெல்லி ஜூலை 16-
கட்சி விரோத நடவடிக்கைகளில் ஈடுபட்டதாக அருண்நேரு வி சி சுக்லா ஆரீப்கான் ஆகியோரைக் காங்கிரஸ் கட்சியிலிருந்து நீக்கி பிரதமர் ராஜீவ் உத்தரவிட்டுள்ளார்.

அருண்நேரு வி. சி. சுக்லா, ஆரீப்கான் ஆகியோர் காங்கிரஸ்கட்சிக்குள் தொடர்ந்து கட்சிவிரோத நடவடிக்கைகளில் ஈடுபட்டு வந்தனர். இந்த அணியில் முன்னாள் நிதியமைச்சர் வி. பி. சிங்கும் இருந்தார். அவரைத்தவிர மற்ற மூன்று பேரும் காங்கிரஸ் கட்சியிலிருந்து நீக்கப்பட்டனர் காங்கிரஸ் பொதுச் செயலாளர் கருப்பையா மூப்பனார் இதை அறிவித்தார்,

காங்கிரஸ் கட்சியிலிருந்து நீக்கப்பட்டவர்கள் நாளை பத்திரிகையாளர்களை சந்திப்பார்கள் என்று தெரிகிறது இந்தக் கூட்டத்தில் வி பி சிங்கும் பங்கேற்பார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

காங்கிரசிலிருந்து நீக்கப்பட்ட ஆரீப்கான் வி பி சிங்குடன் பொதுக்கூட்டத்தில் பங்கேற்றும் பேசி இருக்கிறார்.

## புதிய காவல் நிலையம்: தேவாரம் திறந்தார்

சென்னை ஜூலை 16-
சென்னை அண்ணாநகர் பதினாலு கடை அருகே புதிய காவல் நிலையத்தை தேவாரம் திறந்து வைத்தார்.

இந்தக் காவல் நிலையம் இரண்டுமாடிக் கட்டிடத்தில் அமைக்கப்பட்டுள்ளது இந்த நிகழ்ச்சியில் முன்னாள் ஐ ஜி ஷெனாய் பங்கேற்று குத்துவிளக்கேற்றி வைத்தார்.

இந்த கட்டிடத்தில் செம்பியம் அண்ணாநகர் ஆகிய பகுதிகளின் சட்டம் ஒழுங்கு உதவிக்கமிஷனர் அலுவலகம் மற்றும் குற்றப்பிரிவு உதவிக்கமிஷனர் அலுவலகம் ஆகியவை உள்ளன.

இந்த நிகழ்ச்சியில் துணை கமிஷனர்கள் ஜான்சுந்தர் வடிவேலு ரஞ்சித்சிங் வரதராஜன தாமராஜன் மற்றும் உதவி கமிஷனர்கள் பங்கேற்றனர்.

## ஏரமநாயக்கன் பட்டியில் கழகக் கூட்டம்

பழனி ஜூலை 16.
பழனி ஒன்றியம் ஏரமநாயக்கன்பட்டியில் கழகக் கூட்டம் நடைபெற்றது- கூட்டத்தில் திருமதி கவிநிலவு, கே குப்புசாமி எம் எல் ஏ [அண்ணா மாவட்டக்கழக செயலாளர்] வி ஆர் ராஜாங்கம் [மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணிச் செயலாளர்] மற்றும் பலரும் கூட்டத்தில் கலந்துகொண்டனர்

மதுரை பாவலர் சாமிநாதன் ரஞ்சனி. கலைக்குழுவினரின் கலைநிகழ்ச்சியும் நடைபெற்றது.

# கருணாநிதியின் முறையற்றசெயல்கள் வீரமணி கண்டனம்

மதுரை. ஜூலை 16-
கட்சிகளை பிளவுபடுத்த முயலும் கருணாநிதியின் செயல் பொது ஒழுக்க ரீதியில் முறையான செயல் அல்ல என வீரமணி தெரிவித்துள்ளார் மதுரையில் திராவிடர் கழகத்தலைவர் கி. வீரமணி நிருபர்களுக்குபேட்டி அளித்தார் அப்போது அவர் கூறியதாவது

ஈழத்தமிழர் பிரச்சினை தீர பிரதமர் ராஜீவ் காந்தி பல் வேறு முயற்சிகளை மேற்கொண்டுள்வார்,

தமிழக முதல்வர் எம் ஜி ஆர் ஈழத்தமிழர்களுக்காக 4 கோடி ரூபாய் அளித்துள்ளார் இது பாராட்டுக்குரியது ஆகும் எம் ஜி ஆர் அரசு செய்யும் நல்லகாரியங்களை பாராட்ட தயங்க மாட்டேன்.

இவ்வாறு வீரமணி கூறினார்.

திராவிடர் கழகத்தில் இருந்து முக்கியமானவர்களை பிரிக்க தி.மு.க தலைவர் கருணாநிதி முயலுவதாக கூறப்படுகிறதே என ஒரு நிருபர் கேட்டதற்கு வீரமணி கூறியதாவது:-

அவரின் [கருணாநிதி] செயல் பொது ஒழுக்க ரீதியில் முறையானசெயல் அல்ல எனக் குறிப்பிட்டார்.

திராவிடர் கழகத்தை வலுவிழக்க செய்யும் சொலகளை தக்கமுறையில் சந்திப்போம் எனவும் வீரமணி கூறினார்,

## பஞ்சாப் வங்கியில் கொள்ளை

சண்டிகர், ஜூலை 16-
பஞ்சாபில் உள்ள வங்கி ஒன்றில் தீவிரவாதிகள் புகுந்து ரூபாய் ஒரு லட்சத்து 46 ஆயிரம் கொள்ளையடித்தனர்,

கூட்டுறவு வங்கியில் தீவிரவாதிகள் புகுந்து ஒய்வு பெற்ற போலீஸ் தலைமை காவலர் உட்பட இருவரை கொன்றனர்.

கடந்த 24 மணி நேரத்தில் சந்தேகத்துக்கு இடமான 5 தீவிரவாதிகள் கைது செய்யப்பட்டனர். யந்திர துப்பாக்கியைக் காட்டி கொள்ளை அடித்தவர்கள்காரில் தப்பி ஓடி விட்டனர்,

## திருட்டு வீடியோ கேசட் ஒழிப்பு குழு

தஞ்சாவூர். ஜூலை. 16-
தென்னிந்திய திரைப்பட வர்த்தகசபை ஒத்துழைப்போடு தஞ்சை மாவட்ட கள்ள வீடியோ கேசட் ஒழிப்பு கண்காணிப்பு குழு அமைக்கப்பட்டுள்ளது இதன் தலைவராக கரம்பியம் குழந்தைசாமியும். செயலாளராக சுப்பையனும், பொருளாளராக கோபாலகிருஷ்ணனும் துணைச் செயலாளராக கர்ணனும் அமைப்பாளராக தம்பிக்கோட்டை குருமூர்த்தியும் உறுப்பினர்களாக தியாகராசன் மடத்திக்காடு தமிழரசன் சித்திரைவேலு சண்முகம், முருகையன் ஆகியோர் தேர்வு செய்யப்பட்டுள்ளனர்.

## விருதுநகரில் பொதுநூலகர் சுந்தரராஜனுக்கு பாராட்டுவிழா

விருதுநகர், ஜூலை 16-
இராமநாதபுர மாவட்ட மற்றும் சென்னை கன்னிமாரா பொது நூலக முன்னாள் நூலகரும். ராசாராம் யோகன்ராய் புத்தக நிறுவனத்தின் தென் மண்டல களப்பணியாளருமான அமு சுந்தரராசன் காமராசர் மாவட்ட நூலக அலுவலர் செ.தசு. மீனாட்சி சுந்தரம் தலைமையில் அவரின் 35 ஆண்டு கால நூலகத் துறை சேவையைப் போற்றி விருதுநகர் மாவட்ட மைய நூலகத்தில் பாராட்டு விழா நடந்தது.

# டி. ராஜேந்தரை தி.மு.க. கூட்டத்திற்கு அழைக்க மேலிடம் தடை

சென்னை, ஜூலை 16 டைரக்டர் டி. ராஜேந்தரை திமுக கூட்டத்திற்கு அழைக்க கூடாது என்று திமுக மேலிடம் தடை போட்டுள்ளதாக தகவல் கிடைத்துள்ளது.

திமுக கட்சியினால் டி. ராஜேந்தர் பெறுகிற நன்மை அதிகம் என்று தி.மு.க மேலிடம் கருதுகிறது.

அதன் எதிரொலியாகவே கருணாநிதியின் மகன் மு.க.ஸ்டாலின் சினிமாவில் நடிக்க வைக்கப்பட்டார் அவர் நடித்த படம் வெளியான ஊர்களிலெல்லாம் மு.க. ஸ்டாலினுக்கு வாழ்த்து தெரிவித்து சுவரொட்டி வெளியிடுமாறு தி.மு.க.வினர் மேலிடத்தினால் பணிக்கப்பட்டனர் இதை தொடர்ந்து ராஜேந்தர் படத்திற்கு போட்டியாக ஸ்டாலின் படம் ஒட்டப்பட்டது- ஆனால் இருவரது படங்களும ரசிகர்களால் புறக்கணிக்கப்பட்டு வசூலில் தோல்வியைத் தழுவின

## மேலிடம் முயற்சி

ராஜேந்தரை, அறவே சினிமாவிலிருந்து அகற்ற திமுக மேலிடம் முயன்று வருகிறது இதன் ஒரு கட்டமாக ராஜேந்தரை திமுக சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளுக்கு அழைக்கக்கூடாது என்று மறைமுக உத்தரவை திமுக மேலிடம் பிறப்பித்துள்ளதாகத் தகவல் கிடைத்துள்ளது,

தன்னை விட தனது குடும்பத்தினரைவிட மற்றவர்கள் திமுகவினால் பலன் பெறுவதை கருணாநிதி விரும்ப மாட்டார் அப்படிப்பட்டவர்களின் செல்வாக்கை ஒழித்துக்கட்டுவதில் கருணாநிதி எல்லா முயற்சிகளையும் மேற்கொள்வார் என்பது தெரிந்ததே.

# பால்வளத் தலைவர் வேலுராசாமணி புரட்சித்தலைவரிடம் ஆசி பெற்றார்

சென்னை ஜூலை 16. சேலம் மாவட்ட பால்வள தலைவராக நியமிக்கப்பட்டிருக்கும் வேலு ராசாமணி நேற்று மாலை புரட்சித்தலைவரை சந்தித்து பட்டாடை அணிவித்து ஆசி பெற்றார்,

அவருடன சேலம் மாவட்ட இளைஞர் அணி துணைச் செயலாளர் சிவஞானம் மற்றும் எஸ், பி, ஜெகதீசன் ஆகியோர் உடன் சென்று இருந்தார்.

# ரூ. 160 லட்சம் செலவில் நிலத்தடி நீர் ஆய்வு

சென்னை, ஜூலை 16. சென்னை அருகே நிலத்தடி நீரைப் பற்றி ஆராய உலக வங்கி ரூபாய 90 லட்சம் உதவி உள்ளது தமிழக அரசு ரூபாய 70 லட்சம் ஒதுக்கியிருக்கிறது.

இந்த 160 லட்சத்தைக் கொண்டு ஆரணியாறு, கொற்றலை ஆறு பாலாறு பகுதிகளில நிலத்தடி நீர் ஆதாரம் பற்றி ஆய்வு நடத்தப்படும் இதைப்போல வைகை தாமிரபரணி. பெண்ணை ஆறு பகுதிகளில் குடிநீர் மற்றும் பாசன வசதிக்காக நிலத்தடி நீர் ஆராய்ச்சி நடத்த உலக வங்கி. ரூபாய் 3 கோடி ஒதுக்கி உள்ளது,

இந்த ஆய்வப்பணிகள் 1988ல் முடிவடையும்.

அமைச்சர் ராசாராம் இத்தகவலை நிருபர்களிடம் கூறினார்.

# தென் கோரியாவில் சூறாவளிக்கு 42 பேர் பலி

புதுடெல்லி, ஜூலை 16 தென் கொரியாவில வீசிய பலத்த சூறாவளிக்கு 42 பேர் பலியாகி உள்ளனர் 66 பேரை காணவில்லை அவர்கள் கதி என்ன ஆயிற்று என்று தெரியவில்லை

# மின்சாரம் தாக்கி சிறுவன் மரணம்

சென்னை, ஜூலை 16- சென்னை பார்டர் தோட்டம் பகுதியில் வசிப்பவர் ராமன். இவரது மகன் பன்னீர்செல்வம் (வயது-12 தனது அண்ணன் பணியாற்றும் இடத்திற்கு சென்ற போது மின்சாரத்தில் தவறுதலாக கை வைத்துவிட்டாராம். இதனால் அந்த இடத்திலேயே அவர் இறந்தார் ஆயிரம் விளக்கு போலீசார் இது குறித்து விசாரித்து வருகின்றனர்.

# சென்னையில் நவீன ஓட்டல்: முதல்வர் அடிக்கல் நாட்டினார்

சென்னை, ஜூலை 16- சென்னை நகரில் 25 கோடி ரூபாய் முதலீட்டில் அமைய இருக்கும் நவீன சுற்றுலா ஓட்டலுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் அடிக்கல் நாட்டினார்,

அமெரிக்காவிலுள்ள தமிழர்களும், தமிழ்நாடு சுற்றுலா வாரியமும் இந்தபுதிய ஓட்டலை உருவாக்குகிறது

அமெரிக்காவிலுள்ள இந்தியர்களின் பல்லவா ஓட்டல் கழகம் என்ற அமைப்பும் தமிழக சுற்றுலாவளர்ச்சிக் கழகமும் இணைந்து உருவாக்கும் இந்த ஓட்டலுக்கு "மெட்ராஸ் கார்டன், என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது

நேரு விளையாட்டு அரங்கிற்கு பின்புறம் இந்த ஓட்டல் அமைகிறது இதற்கு அடிக்கல் நாட்ட முதல்வர் புரட்சித்தலைவர் சரியாக 11மணிக்கு வந்தார் கடுமையான வெய்யில் இருந்தும் பல்லாயிரக்கணக்கான மக்கள் வெயிலை பொருட்படுத்தாது கூடி இருந்தனர் புரட்சித் தலைவரைப் பார்த்ததும் உற்சாகம் மேலிட்டு கோஷம் எழுப்பினர் கரவொலி செய்தனர் அனைவருக்கும் வணக்கம் தெரிவித்தபடி புன்னகை முகத்துடன் மேடையில் சென்று புரட்சித்தலைவர் அமர்ந்தார்.

அவரைக்கண்ட மக்கள் வெள்ளம் மீண்டும் கரவொலி செய்தது புரட்சித் தலைவருடன் நிதியமைச்சர் டாக்டர் நாவலர், அமைச்சர்கள் முத்துசாமி வி வி சுவாமிநாதன்வாரிய தலைவர் பாலகுரு முன்னாள் அமைச்சர் ராகவானந்தம் தலைமைச்செயலாளர் பத்மநாபன் டாக்டர் பழனி பெரியசாமி ஆகியோர் வந்தனர் விழா மேடையின் முன் வரிசையில் அமர்ந்திருந்த முன்னாள் அமைச்சர் ஆர் எம் வீயை முதல்வர் புரட்சித்தலைவர் மேடையில் வந்து அமரும்படி அழைத்தார் அப்போது கை தட்டல் எழுந்தது ஆர் எம். வீ மேடைக்கு சென்று அமர்ந்தார்

சுற்றுலாவாரியதலைவர் பாலகுரு முதல்வர் புரட்சித் தலைவருக்கு மாலை அணிவித்தார் அமைச்சர் வி வி சுவாமிநாதன் வரவேற்புரை நிகழ்த்தினார் அதன் பிறகு முதல்வர் புரட்சித் தலைவர் மேடையிலிருந்த பொத்தானை அழுக்கி பெயர் பலகையை திறந்து வைத்தார் அதன் பிறகு பெயர் பலகை அருகே சென்று சிமெண்ட் கலவையை தடவினார் வெள்ளிக் தட்டு சங்கக்கரணை ஆகியவை முதல்வர் புரட்சித்தலைவருக்கு வழங்கப்பட்டது

பல்லவா ஓட்டல்நிர்வாக இயக்குனர் பழனி பெரியசாமி நன்றி உரையாற்றினார் புரட்சித் தலைவர் விழா முடிந்து மேடையைவிட்டு இறங்கிய போது மக்கள் பக்கம் கையை அசைக்க மக்கள் நீண்ட நேரம் கரவொலி எழுப்பினர்.

பத்தே நிமிடத்தில்விழா முடிவடைந்தது வரவேற்புரை நிகழ்த்திய வி வி சுவாமிநாதன் பேசியதாவது:-

தமிழக சுற்றுலா வாரிய வரலாற்றில் பொன்னேட்டில் வைரவரிகளால் பொறிக்கப்படும் நாள் இது 1977ம் ஆண்டு புரட்சித் தலைவர் ஆட்சிப்பொறுப்பேற்ற பிறகு பல துறைகளிலும் தமிழகம் முன்னேற்றம் அடைந்துள்ளது வெளிநாட்டு இந்தியர்களின் முதலீட்டைக் கொண்டு பல நல்ல பணிகள் துவங்க இருக்கின்றன சுற்றுலா பயணிகளை ஈர்க்க ஓட்டல்கள், தொழிற்சாலைகள் போன்றவைகளை அவர்கள் அமைப்பதன் மூலம் வேலைவாய்ப்பு ஏற்படுகிறது.

இந்தியாவிலேயே முதன் முதலாக இந்த துறையில் இப்படிப்பட்ட ஓட்டல் உருவாக இருக்கிறது தமிழக அரசின் வருமானம் 1977ல் 607 கோடியாக இருந்தது 87ல் 2516 கோடியாக உயர்ந்துள்ளது புரட்சித்தலைவர் ஆட்சியில்ஒவ்வொருதுறையும பெரும் வளர்ச்சி பெற்றுள்ளது

இவ்வாறு அமைச்சர் வி வி சுவாமிநாதன் கூறினார்.

புரட்சித்தலைவருக்குபட்டாடை போர்த்தி வி வி சுவாமிநாதன் ஆசி பெற்றார் பழனி பெரியசாமி பேசுகையில்இந்தஅமைப்பு ரூபாய் 20கோடி முதல 25கோடி அளவிற்கு உருவாகும் 15 5 ஏக்கரில் நவீன வசதிகளுடன் பூங்கா போல உருவாக்கப்படும் 800 பேருக்கு நேரடியாகவும் 1500 பேருக்கு மறைமுகமாகவும் வேலை வாய்ப்பு கிடைக்கும் 2 அல்லது இரண்டரை ஆண்டுக்குள் இது கட்டி முடிக்கப்படும் அமெரிக்காவிலுள்ள இந்தியர்கள் தமிழகத்தில் பல தொழில்களை துவக்க முன்வந்துள்ளனர்.

ஏற்கனவே சிமெண்ட் ஆலையும, சர்க்கரை ஆலையும் துவக்கும்வேலை நடை பெற்று வருகிறது. முதல்வர் எங்களது நண்பராக இருக்கிறார்

இவ்வாறு பழனி பெரியசாமி கூறினார்.

# கொள்ளையர்களை சுட போலீஸ் உத்தரவு

சென்னை, ஜூலை 16. துப்பாக்கி முனையில் வழிப்பறி கொள்ளை அடிக்கும் கொள்ளையர்களை போலீசார் உடனே சுட உத்தரவிடப்பட்டுள்ளது சென்னை நகரில் சில இடங்களில கடைகள் வங்கிகள் வீடுகளில் துப்பாக்கியை காட்டி வழிப்பறி கொள்ளை அடிக்கப்பட்டுள்ளது சில இடங்களில் கொள்ளை அடிக்கும் முயற்சியும் நடந்துள்ளது

அப்படிப்பட்ட கொள்ளையர்களை உடனே சுட போலீசாருக்கு உத்தரவிடப்பட்டுள்ளது

இத்தகவலை போலீஸ் கமிஷனர் தேவாரம் நிருபர்களிடம் தெரிவித்தார்.

சென்னை அண்ணா சாலையில் ஜெமினி மேம்பாலத்திலிருந்து பெரியார் சிலைவரை காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை லாரி, டிரக்கு, கைவண்டிகள் மற்றும் டிராக்டர்கள் கனரக வண்டிகள் செல்ல தடை விதிக்கப்படுகிறது. வரும் 20ந் தேதி முதல் இந்த தடை அமலுக்கு வருகிறது என்றும் போலீஸ் கமிஷனர் கூறினார்,

போலீஸ் கமிஷனர் அலுவலகத்தில் பொது மக்கள் தொடர்பு அலுவலகத்தை கமிஷனர் தேவாரம் திறந்துவைத்தார். உதவி கமிஷனர் மகேந்திரன் பொது மக்கள் தொடர்பு அலுவலராக உள்ளார்.

# கருணாநிதியை புரிந்துகொள்வீர்

'மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டு கட்சி எச்சரிக்கை விடுகிறது நாம் மேலும் மேலும், படையெடுப்பு என்ற பேச்சை பேசினால் இலங்கை அரசாங்கம் ஏகாதிபத்தியத்திடம் பூரணமாக சரணாகதி அடைந்து தன்னுடைய நாட்டை அதனிடம் ஒப்படைக்கக்கூடிய நிலைமையை நாம் உருவாக்குவோம். அது தமிழ் மக்களுக்கு உதவி செய்யாது'

ஆகவே நான், கூற விரும்புவது நாம் படையெடுப்பு என்று பேசினால், அது இலங்கைஅரசை ஏகாதிபத்தியத்திடம் பூரணமாக சரணடையக்கூடிய பாதையை வகுக்கும். அது தவறு!

-சட்டமன்றத்தில் மார்க்சிஸ்டு தலைவர் என். சங்கரய்யா பேச்சு '26-10-1983 பாகம் 52 பக்கம் 227

'பாதுகாப்பு அமைச்சராக இருந்த போது உடனடியாக ராணுவத்தை அனுப்பி இலங்கைத் தமிழர்களைக் காப்பாற்றவேண்டும் என்று நான் சொன்னபோது கருணாநிதி சொல்வது முட்டாள்தனம்' என்று சொன்னவர் தான் வெங்கட்ராமன் அவருக்கும் தமிழ் உணர்வுக்கும் என்ன சம்பந்தம்?

கருணாநிதி பேச்சு சென்னை முரசொலி பக்கம் 4 பத்தி 3

இந்திய அரசு பங்களாதேஷில் மேற்கொண்டது போன்ற நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று குரல் கொடுத்தபோது அதனை முட்டாள்தனம் என்று இழித்துப் பேசியவர் திரு. ஆர் வி. என்பதை எப்படி மறந்துவிட முடியும்.

-கருணாநிதி அறிக்கை 13-7-87 முரசொலி

கருணாநிதியே! உமது வாதப்படி மார்க்சிய கம்யூனிஸ்ட் கட்சியும் தமிழ் உணர்வு அற்ற கட்சிதானா?

ஆர் வி.யை ஆதரிக்காததற்கு அவர் சொன்ன வார்த்தை தான் காரணமென்றால், மார்க்சிய கம்யூனிஸ்டுகளுடன் அரசியல் கூட்டு வைப்பது தவறுதானே!

கம்யூனிஸ்ட் அமைச்சரவையில் அமைச்சராக இருந்து, தற்போது அக்கட்சியின் அனுதாபியாக அக்கட்சியால் பிரேரேபிக்கப்பட்ட கிருஷ்ணய்யரை ஆதரிப்பது·

கருணாநிதியே - இது கோமாளித்தனம் தானே! கருணாநிதிக்கு கொள்கையைப் பற்றியோ தமிழர்களைப் பற்றியோ உண்மையான கவலை இல்லை!

அவர் கவலை எல்லாம் அவர் அரசியல் வியாபாரத்தைப் பற்றியே தான்.

-சேந்தூரான்

# நதிகளை நாட்டுடைமையாக்க எம். பி. க்கள் வற்புறுத்தல்

புதுடெல்லி, ஜூலை 16- முக்கிய நதிகளை தேசிய உடைமையாக்கி மத்திய அரசே அதன் அபிவிருத்தி பணிகளை மேற்கொள்ள வேண்டுமென்று நாடாளுமன்ற உறுப்பினர்கள் வலியுறுத்தி உள்ளனர்,

நதிகள் தேசிய மயமாக்கப்பட வேண்டும் என்ற கருத்தை முதல்வர் புரட்சித்தலைவர் நீண்டகாலமாக வலியுறுத்தி வருகிறார் புரட்சித்தலைவரின் கருத்துக்கு இப்போது நாடு முழுவதும் ஆதரவு பெருகி வருகிறது நதிகள் தேசிய மயமாக்கப்பட வேண்டும் என்பதை நாடாளுமன்ற உறுப்பினர்களே வலியுறுத்தி உள்ளனர்

மத்திய நீர்ப் பாசன துறைக்கான நாடாளுமன்ற உறுப்பினர்கள் ஆலோசனை கூட்டம் சமீபத்தில் டெல்லியில் நடைபெற்றது சங்கரானந்த் இந்தக்கூட்டத்திற்கு தலைமைவகித்தார்.

## தேசிய திட்டம்

இந்தக் கூட்டத்தில் பங்கேற்ற நாடாளுமன்ற உறுப்பினர்கள் இந்தியாவிலுள்ள முக்கிய நதிகளை தேசியமயமாக்க வேண்டுமென்று வலியுறுத்தினர்

ராஜஸ்தானில் இந்திரா காந்தி நாகர் திட்டத்தை தேசிய திட்டமாக எடுத்து செயல்படுத்தியது போல மற்ற திட்டங்களையும் செயல்படுத்தினால் மக்களுக்கு அதிக அளவு பயன் கிடைக்குமென்றும் நாடாளுமன்ற உறுப்பினர்கள் வலியுறுத்தினர் மத்திய அரசு அனுமதி தராததால் 73 நீர்ப்பாசனத் திட்டங்கள் கிடப்பில் இருப்பதாகவும் சுட்டிக்காட்டிய நாடாளுமன்ற உறுப்பினர்கள் அவைகளுக்கு விரைவில் அனுமதி தருமாறும் வலியுறுத்தினர்

பொது மக்களிடையே தண்ணீர் பற்றாக்குறை ஏற்படாதவாறு தடுப்பதற்கான நடவடிக்கைகள் பற்றி எழுச்சியை உருவாக்க வேண்டும் நீர்வள நாள் என்று ஆண்டுக்கு ஒரு முறை கொண்டாடலாம் என்றும் மத்திய அமைச்சர் சங்கரானந்த் தெரிவித்தார்.

இந்தக் கூட்டத்தில் பேசிய நாடாளுமன்ற உறுப்பினர்கள் தெலுங்கு கங்கை திட்டம் உள்ளிட்ட பல திட்டங்களை வலியுறுத்தினர். தெலுங்கு கங்கை திட்டம் தேசிய முக்கியத்துவம் வாய்ந்தது என்றும் அவர்கள் கூறினர்.

இந்தக் கூட்டத்தில் பேசிய மத்திய அமைச்சர் சங்கரானந்த் மத்திய நிலத்தடி நீர் கழகம் கிராமங்களுக்கு குடிநீர் வழங்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறது என்றும் தெரிவித்தார்.

# திருச்சி விவசாயிகளுக்கு ரூ. 9கோடி வட்டி சலுகை

திருச்சி, ஜூலை 16 திருச்சி மாவட்ட விவசாயிகள் சங்கடனை திருப்பசெலுத்தி சுமார 9 கோடி ரூபாய் அளவுக்கு வட்டி சலுகை பெற்றுள்ளனர்.

திருச்சி மாவட்ட விவசாயிகளுக்கு இந்த ஆண்டில் ரூபாய் 6 கோடி கடன் வழங்கப்படும்என்று திருச்சி மாவட்ட மத்திய கூட்டுறவு வங்கி தனி அதிகாரி அப்பாஸ் கூறினார்.

திருச்சி மத்தியக் கூட்டுறவு வங்கி சடந்த ஆண்டில்85 சதவிகித கடனை வசூலித்து விட்டது ரூபாய் 24 கோடியே 54 லட்சம் கடன் வசூல் ஆகாமல் இருந்தது வட்டி சலுகை அறிவித்த பின் கடனை விவசாயிகள் துரிதமாகக் கட்ட ஆரம்பித்தார்கள். ஜூன் 30ந் தேதி வரை 20 கோடியே 50 லட்சம் ரூபாய் வசூலானது 3கோடியே 10 லட்சம் ரூபாய் மட்டும் பாக்கி உள்ளது

குறுகிய கால கடனாக ரூபாய் 14 கோடியே 85 லட்சம் வழங்கப்பட்டது இதில் 12 கோடி வசூலானது போக ரூபாய் 2 கோடியே 85லட்சம் பாக்கி உள்ளது

திருச்சி மாவட்டத்தில் பிப்ரவரி 28ல் 14 ஆயிரத்து 851 விவசாயிகள் தாங்கள் வாங்கிய கடனில் 50சதவீதத்தை திருப்பச்கட்டியதின் மூலம் 4கோடியே 73 லட்சம் ரூபாய் வட்டி சலுகையைப் பெற்றார்கள்.

அதே போல் ஜூலை 30ந் தேதிக்குள் 40ஆயிரத்து 439 விவசாயிகள் ரூபாய் 2கோடியே 6 லட்சம் கடனை செலுத்தி ரூபாய் 4 கோடி வட்டி சலுகையைபெற இருக்கின்றனர்.

# 3வது கிணற்றில் எண்ணெய்எடுக்கும் பணி ஆரம்பம்

தஞ்சாவூர் ஜூலை16 நரிமணத்தில மூன்றாவது எண்ணெய் கிணற்றில் எண்ணெய் எடுக்கும் பணி துவங்கி உள்ளது இந்த கிணற்றில் வர்த்தகரீதியாக எண்ணெய் எடுக்கும பணி அடுத்த மாதம் துவங்குகிறது நாளொன்றுக்கு இந்த கிணற்றிலிருந்து 25 ஆயிரம் லிட்டர் பெட்ரோல் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

# பருவமழை தவறினாலும் தீவிர பயிர் சாகுபடி

கோயம்புத்தூர், ஜூலை 16 பருவமழை தவறினாலும் காலத்திற கேற்றபடி பயிர் சாகுபடி செய்யும் சிறந்த முறைகளை தமிழக விவசாயத்துறை தீட்டியிருக்கிறது தமிழகத்தில் வேளாண்மை சிறந்த முறையில் நடப்பதற்கான சீரிய திட்டங்களை புரட்சித்தலைவர் அரசு செயல்படுத்தி வருகிறது

கோயம்புத்தூர் வந்த தமிழக விவசாயத்துறை இயக்குனர் என். ஆதிமூலம் இது குறித்து நிருபர்களிடம் கூறியதாவது:-

தமிழகத்தில் ஆண்டுக்கு ஆண்டு பருவநிலை மாறி வருகிறது பருவமழை தொடர்ந்து பொய்த்து வருவதால் விவசாயம பாதிக்கப்படுகிறது

மழை சரிவர பெய்யாததால் சாகுபடிக்கு தேவைப்படும் பாசனநீரும் முறையாக கிடைப்பதிலை

ஆகவே பருவமழை பொய்த்தாலும் விஞ்ஞான முறைகளை கையாண்டு நவீன உத்திகள்படி வேளாண்மை நடத்தும் திட்டங்களை தமிழக அரசு விவசாயத் துறையினர் தீட்டியிருக்கிறார்கள்.

சென்ற ஆண்டின் போதும் இப்படிப்பட்ட நவீன முறைகளை கையாண்டு மகசூல் பெருகியது உணவு பொருள்களும் அதிக அளவில் உற்பத்தி செய்யப்பட்டன

பருவமழைதவறிவிட்டாலும் அதற்கேற்ப பயிர்களையும் நிலத்துக்கு தகுந்தாற்போல் பயிர் செய்ய விவசாயத் துறையினர் முயற்சிகளை மேற்கொண்டுள்ளன-

தண்ணீர் இல்லாமல் வறட்சி ஏற்படும்போதும நிலத்தடி நீரை மேம்படுத்தி பயிர் செய்யும் முறைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன

இவ்வாறு ஆதிமூலம் கூறினார்.

## பொது (தொலைபேசிகள்-2)த் துறை

அரசாணை நிலை எண் 1093
நாள் 15-7-1987

## நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 6 ஆம் பிரிவின் கீழான விளம்பல் அறிவிக்கை

கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காகக் கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மனநிறைவடைந்திருப்பதோடு அந்நிலங்களுக்கு வழங்கப்பட வேண்டிய இழப்பீட்டுத் தொகை முழுவதும் பொது வருவாய்களிலிருந்து செலுத்தப்பட வேண்டும். என்றும் அவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது ஆகவே 1894-ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச் சட்டம் 1-1894) 6-ஆம் பிரிவின்படி, தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் கீழ்க்காணும விவர அட்டவணையில குறிப்பிடப்பட்டுள்ளதும், 0 330 ஹெக்டேரைக் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ, குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக அதாவது தொலைபேசி நிலையம் அமைக்கத்தேவைப்படுகின்றன என்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலங்களின வரைபடங்கள் புதுக்கோட்டை கோட்டாட்சித் தலைவர் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன அவற்றை அலுவலகப் பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும பார்வையிடலாம்,

### விவர அட்டவணை

மாவட்டம்: புதுக்கோட்டை; வட்டம்: திருமயம்; கிராமம்: பொன்னமராவதி

| நன்செய் அல்லது புன்செய் என்ற நிலத்தின் வகைப்பும் புலஎண்ணும் | நிலசொந்தக்காரரின் பட்டாதாரரின் அல்லது அனுபவதாரர்ன் பெயர் | கையகப் படுத்த உள்ள பரப்பளவு |
|---|---|---|
| புன்செய் நகரளவை எண் 1262 | 1 வேலு ஆசாரி மனைவி சரஸ்வதி<br>2. சிவ முத்தையா செட்டியார் மனைவி மீனாட்சி ஆச்சி<br>3. குழந்தைவேலு மகன் குழந்தைவேலு<br>4 ரெங்கசாமி ஆசாரி மகன் சாமிநாத ஆசாரி<br>5 நாராயணஸ்தபதி மனைவி ராஜசுந்தரி<br>6. பாலன்நாயர் மகன் கண்ணதாசன்<br>7 காத்தலிங்கம் மகன் வெள்ளச்சாமி | 0 330 ஹெக்டேர் |

தரிசா அல்லது பயிரிடத்தக்கதா? மரங்கள், கட்டிடங்கள் கிணறுகள் ஆகியவற்றைக் குறிப்பிடவும் தரிசு மலையிட்ட கூரை வீடுகள் 3 கிணறுகள்-2

வீரா பாலகிருஷ்ணன்
அரசு இணைச் செயலாளர்

DIPR-38 PDU-87 a pco

# ரூபாய் 7 லட்சம் செலவில் மதுரை கிருதுமால் நதித்திட்டம்

மதுரை ஜூலை 16- மதுரை கிருதுமால் நதி திட்டத்துக்கு 77 லட்சம் ரூபாய் செலவில் திட்டம் தயாரிக்கப்பட்டு அரசுக்கு அனுப்பப்பட்டுள்ளது என மதுரை மாநகராட்சி ஆணையாளர் அலாவுதீன் நிருபர்களிடம் கூறினார்.

அவர் கூறியதாவது:

மாநகராட்சி சட்டவிதிகளுக்கு மீறி கடைகளில் ஆக்கிரமிப்பு செய்யப்பட்டு இருந்தால் அதை அகற்ற தயவுதாட்சண்யமின்றி நடவடிக்கை எடுக்கப்படும். ஆக்கிரமிப்புகளை அகற்றும் நடவடிக்கை தொடர்ந்து ஓய்வின்றி நடத்தப்படும்.

மதுரை மாநகரில் குடிநீர் பிரச்சினையை தீர்க்க மாநகராட்சி எல்லைக்குள் 120 ஆழ்குழாய் கிணறுகள் தோண்டப்பட்டு உள்ளன. மேலும் 80 ஆழ்குழாய் கிணறுகள் தோண்டப்படும்.

பெரியார் பேருந்து நிலையத்தில் மழைகாலங்களில் தண்ணீர் தேங்கி நிற்பதை தடுக்க ரூபாய் 77 லட்சம் செலவில் திட்டம் ஒன்று தயாரிக்கப்பட்டு நீர்ப்பாசன தலைமை பொறியாளர் ஒப்புதலுக்கு அனுப்பப்பட்டுள்ளது என மாநகராட்சி ஆணையாளர் அலாவுதீன் கூறினார்.

## கலெக்டர் பேட்டி

மதுரை மாவட்ட ஆட்சி தலைவர் எம் தேவராஜ் மதுரையில் நிருபர்களுக்கு பேட்டி அளித்தார். அப்போது அவர் கூறியதாவது:

பூனாவில் 18 மாநில மாவட்ட ஆட்சித்தலைவர்கள் கலந்து கொண்ட நிர்வாக பயிற்சி வகுப்பு ஒரு வாரகாலம் நடைபெற்றது. இதில் ஒவ்வொரு மாநிலத்தில் உள்ள ஒரு மாவட்ட ஆட்சித் தலைவரும், மாவட்ட காவல் துறை கண்காணிப்பாளர் ஒருவரும் கலந்து கொண்டனர். தமிழகத்தின் சார்பில் மதுரை மாவட்ட ஆட்சித் தலைவரான நானும், மாவட்ட காவல் துறை கண்காணிப்பாளர் கே. வி. எஸ் மூர்த்தியும் கலந்து கொண்டோம்.

பெரியாறு அணையில் 110 அடி தண்ணீர் தான் உள்ளது. கம்பம் பள்ளதாக்கில் உள்ள 6145 ஹெக்டேர் நிலத்திற்கு முதல் போக நெல் சாகுபடி செய்ய 6ந் தேதி தண்ணீர் திறந்து விடப்பட்டது. 18ந் தேதி தண்ணீர் திறந்து விடுவது நிறுத்தப்படும். மீண்டும் ஒரு மாதம் கழித்து தண்ணீர் திறந்து விடப்படும். இதுவரை சுமார் 2690 ஹெக்டேர் பகுதியில் நாற்றங்கால் அமைத்துள்ளனர்.

வறட்சி பகுதியில் மான்ய விலையில் உரங்கள் சிறு விவசாயிகளுக்கு வழங்கப்பட்டு வருகிறது. மதுரை மாவட்டத்திற்கு அரசு ஒதுக்கீடு செய்த மானிய தொகை ரூபாய் 15 லட்சம். 30-6-87 வரை ரூபாய் 73,844-க்கான உரம் விநியோகிக்கப்பட்டுள்ளது.

ஒரு ஏக்கருக்கு ரூபாய் 1500- மான்யத்துடன் சொட்டு நீர் பாசனம் அமைக்க ஏற்பாடு செய்யப்பட்டு 50 ஏக்கரில் அமைக்க குறியீடு நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

1987 88 ஆம் ஆண்டில் ஜூன் மாதம் வரை 520 சிறு தொழில் நிறுவனங்கள் புதியதாக ஆரம்பிப்பதற்கான அனுமதி வழங்கப்பட்டுள்ளது.

1987-ல் ஜூன் மாதம் 111 சிறு தொழில் நிறுவனங்களுக்கு நிரந்தர பதிவு சான்றிதழ் வழங்கப்பட்டுள்ளது. இவற்றின் மூலம் 698 நபர்கள் வேலை வாய்ப்பினை பெற்றுள்ளனர்.

மதுரை மாவட்டத்தில் விரைவு படுத்தப்பட்ட மேம்பாட்டு திட்டத்தின் கீழ் 11000 பேர் பயன் பெற ரூ 27.50 லட்சம் தொகை ஒதுக்கீடு செய்யப்பட்டு குடிசை மாற்று வாரிய பணிகள் நடைபெற்று வருகின்றன.

பெரியார் நகரில் எளிய மக்களுக்கு வீடுகள் கட்டும் திட்டத்தில் 999 பேர் பயன்பெற 89.59 லட்சம் செலவில் 600 வீடுகள் கட்டும் பணி நடைபெற்று வருகிறது என மதுரை மாவட்ட ஆட்சித்தலைவர் எம். தேவராஜ் நிருபர்களிடம் கூறினார்.

# சிறுசேமிப்பு திட்டம்: ஜெயங்கொண்டம் ஊராட்சி முதலிடம்

திருச்சி, ஜூலை 16- ஜெயங்கொண்டம் பஞ்சாயத்து யூனியன் சிறுசேமிப்பில் முதல் இடம் பெற்றிருப்பதாக ஊராட்சி ஒன்றியத் தலைவர் முத்தையா தெரிவித்தார்.

ஜெயங்கொண்டம் ஊராட்சி மன்ற தலைவர் கூறியதாவது:-

ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சி திட்டத்தின் கீழ் நலிவடைந்த 750 பெண்களின் மேம்பாட்டுக்காக கடந்த ஆண்டில் 9 மையங்கள் ஆரம்பிக்கப்பட்டு அவைகளின் மூலம் மெழுகு தயாரித்தல் பாய் நெய்தல் போன்ற தொழில்கள் கற்பிக்கப்படுகின்றன. இதற்காக 225 பெண்களுக்கு தலா ரூபாய் 6 ஆயிரம் கடன் வழங்கப்பட்டது.

சமூக நலத்துறை மூலம் உடையார் பாளையத்தில் காலணி தயாரிப்பாளர் சங்கத்தை கடந்த 5ந்தேதி மாவட்ட சமூகநல அமைப்பாளர் வசந்தா தேவி துவக்கி வைத்தார்.

வறட்சி நிவாரணப்பணியின் கீழ் ஒரு லட்சம் ரூபாய் செலவில் வேலைகள் முடிக்கப்பட்டு விட்டன. மேலும் மூன்று லட்சம் ரூபாய்க்கு வறட்சி நிவாரணப்பணிகள் செய்வதற்கு திட்டமிடப்பட்டிருக்கிறது.

இந்தப்பகுதியில் குடிநீருக்காக மிகவும் அல்லல்படும் கிராமங்களான 'இறவாங்குடி தத்தனூர்' 'கழுமங்கலம்' ஆகிய ஊர்களுக்கு லாரி மூலம் குடிநீர் வினியோகிக்கப்படுகிறது.

தமிழ்நாடு குடிநீர் வாரியம் சார்பில் 'பிள்ளைபாளையம், 'ரெட்டியார் வெட்டு, 'கழுமங்கலம் ஆகிய ஊர்களில் ஆழ்குழாய் கிணறுகள் அமைத்து குடிநீர் பிரச்சினை தீர்க்கப்பட்டது.

ஜெயங்கொண்டம் ஒன்றியம் கடந்த ஆண்டு குடும்பநலத் திட்டத்தில் திருச்சி மாவட்டத்தில் 2-வது இடத்தைப் பெற்றது. ஆனால் சிறுசேமிப்பில் முதலிடத்தைப் பெற்றிருக்கிறது.

இவ்வாறு முத்தையா கூறினார்.



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust press at 34 Nelson Manickam Road, MADRAS 600029



அமைச்சர் திருநாவுக்கரசுவின் பிறந்த நாள் விழாவின் போது தஞ்சை மாவட்ட எம்ஜிஆர் இளைஞர் அணிச் செயலாளர் ஆழி. கோ. மருதையன் முருகன் சிலை ஒன்றை பரிசாக வழங்கினார். இரா. துரைக்கண்ணு, ஆர்.எஸ். மோகன் தி, நகர பாண்டியன் ஆகியோர் உடனிருந்தனர்.

## விடுதலை புலிகள் தாக்கி ஹெலிகாப்டர் சேதம்

கொழும்பு ஜூலை 16- முல்லைத்தீவு மாவட்டத்திலுள்ள முறிப்பிற்கு அருகாமையிலுள்ள ஆயிரம் கட்டை எனும் இடத்தில் இலங்கை ராணுவத்தினருக்கும் விடுதலைப்புலி வீரர்களுக்கும் ஏற்பட்ட நேரடி மோதலில் 3 இராணுவத்தினர் கொல்லப்பட்டும் பலர் படுகாயமடைந்தும் உள்ளனர். சுமார் ஒரு மணி நேரம் நடைபெற்ற இக்கடும் போரில் ராணுவத்தினருக்கு ஆதரவாக வந்த ஹெலிகாப்டர் விமானம் ஒன்றின் மீது விடுதலைப்புலி வீரர்கள் மேற்கொண்ட தாக்குதலையடுத்து பலத்த சேதத்திற்குள்ளான அந்த ஹெலிகாப்டர் உடனடியாக முல்லைத் தீவு ராணுவ முகாமிற்குள் இறக்கப்பட்டது.

## ரயில்களில் கம்ப்யூட்டர் பதிவு முறை

புதுடெல்லி, ஜூலை 16 கல்கத்தா, பம்பாய் இடையே செல்லும் அனைத்து பயணிகள் ரயிலுக்கும் கம்ப்யூட்டர் முறையில் ரிசர்வு செய்யப்படுவது இந்த ஆண்டுக்குள் நடைமுறைப்படுத்தப்படுமென மத்திய ரெயில்வே அமைச்சர் சிந்தியா தெரிவித்துள்ளார்.

தனது அமைச்சகத்துக்கான ஆலோசனைக் கூட்டத்தில் பேசுகையில் மேற்கண்ட தகவல்களை அமைச்சர் தெரிவித்தார். சரக்குகள் போக்குவரத்தையும் கம்ப்யூட்டர் மயமாக்கும் திட்டம் 1993-க்குள் செயல்படத் துவங்குமென்றும் அவர் தெரிவித்தார்.

இனிகட்டப்படும் எல்லா ரயில் நிலையங்களிலும் 26 ரயில்பெட்டிகள் நிற்கும் அளவுக்கு பெரிய பிளாட்பாரம் கட்ட அரசு கொள்கை முடிவு செய்துள்ளதாகவும் அவர் கூறினார்.

# உன்னதமான சத்துணவு திட்டம்: உலகவங்கி நிபுணர் பாராட்டு

திருச்சி ஜூலை 16- தமிழ்நாட்டில் நடைபெற்று வரும் சத்துணவு திட்டத்தை முன் அறிவிப்பு இன்றி நான் பார்த்தேன் உலகிலேயே இது ஒரு உன்னதமான திட்டம் என்றும் இந்தத் திட்டத்தை சாதிக்க முதல்வர் உலகத்திலேயே ஒரே மனிதன் என்று உலக வங்கியை சேர்ந்த கிரீன் என்ற பாதிரியார் பாராட்டினார்.

குவாகம் கிராமத்தில் நடந்த புரட்சித்தலைவர் பிறந்தநாள் விழாவில் சத்துணவு அமைச்சர் ஆர். சவுந்தரராசன் மேற்கண்ட தகவலை அறிவித்தார். அவர் மேலும் பேசுகையில்

நாட்டுக்கு நல்லது சொன்னவரை நாடு ஏற்றது அந்த நல்லவர் எம் ஜி ஆர். என்பது நாடறிந்த உண்மை.

நான் சமீபத்தில் விமானம் மூலம் சென்னை வந்தேன். அதே விமானத்தில் உலக வங்கியைச் சேர்ந்த 'கிரீன்' என்ற பாதிரியாரும் வந்தார். அவர் என்னிடம் கூறியதாவது:

தற்போது தமிழ் நாட்டில் நடைபெற்று வரும் சத்துணவு திட்டத்தை முன் அறிவிப்பு இன்றி நான் பார்த்தேன். உலகிலேயே இது ஓர் உன்னதமான திட்டம். இதை சாதித்த உங்கள் முதல்வர் உலகத்திலேயே ஒரே மனிதர் என்று பாராட்டினார். அந்தப் பாராட்டுத் என் காதில் இன்பதேனாக பாய்ந்தது.

தற்போது பள்ளிகளில் படிக்கும் சிறுவர்களுக்கும் காலணி வழங்க முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டுள்ளார். இந்த நாட்டில் தொடர்ந்து 3 முறை வறட்சி வந்தது. அரிசி விலை உயர்ந்ததா? உணவு இல்லாமல் மக்கள் திண்டாடினார்களா? இல்லை! இதுதான் புரட்சித்தலைவர் ஆட்சி!

இவ்வாறு அமைச்சர் சவுந்தரராசன் பேசினார்.

# சமரச பேச்சு: ஜெயவர்த்தனேவுடன் தீட்சித் ஆலோசனை

கொழும்பு ஜூலை, 16 விடுதலை புலிகளுடன் மீண்டும் சமரச பேச்சு நடத்துவது குறித்து இலங்கை அதிபர் ஜெயவர்த்தனேவுடன் இந்திய தூதர் தீட்சித் ஆலோசனை நடத்தினார்.

இலங்கையில் சுமுகநிலை ஏற்பட இந்தியா தொடர்ந்து முயற்சித்து வருகிறது. அரசியல் முறையில் தீர்வு காண்பதற்கான நடவடிக்கைகளில் இந்தியா ஈடுபட்டுள்ளது.

விடுதலைப் புலிகளுக்கும் இலங்கை அரசுக்கும் முதல்வர் புரட்சித்தலைவரும் பிரதமர் ராஜீவும் மேற்கொண்ட முயற்சியால் பல கட்டங்களில் சமரச பேச்சு நடைபெற்றது.

இலங்கையுடன் மீண்டும் சமரச பேச்சு நடத்துவது குறித்து இலங்கைக்கான இந்திய தூதர் தீட்சித் இலங்கை அதிபர் ஜெயவர்த்தனேவை சந்தித்து ஆலோசனை நடத்தினார்.

### மறுப்பு

யாழ் மக்களுக்கு உதவ இந்தியா அனுப்பும் உணவு பொருட்கள் விடுதலைப புலிகளுக்கு திருப்பி விடப்படுவதாக வந்த செய்தியை இந்திய தூதரகம் மறுத்துள்ளது. இந்தியா அனுப்பும் உணவுப் பொருட்கள் இலங்கை அரசின் ஏஜண்டுகள் மூலமாக சப்ளை செய்யப்படும் போது அவைகள் எப்படி விடுதலைப்புலிகளுக்கு அனுப்பப்படும் என்றும் கேட்டுள்ளது.

## ரிக்ஷா தொழிலாளர்கள் சங்க நிர்வாகிகள் தேர்வு

திண்டுக்கல் ஜூலை 16 தமிழ்நாடு அண்ணா சைக்கிள் ரிக்ஷா ஓட்டுநர் சங்க அண்ணா மாவட்ட நிர்வாகிகளாக கீழ்கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

தலைவர் ஆர் பி ராஜா துணை தலைவர் ராயல் செயலாளர் எம் புரட்சிதாசன் துணைசெயலாளர் ஏ டி ஜோசப் பொருளாளர் சி தாமஸ் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

தேர்வின் போது மாநிலச் செயலாளர் ந குணசேகரன் தலைமை வகித்தார்.

# இதய இயக்கம் பற்றி ஆய்வு: இந்திய டாக்டருக்கு விருது

சிக்காகோ, ஜூலை 16- இதயத்தின் இயக்கம் பற்றிச் சிறப்பான ஆய்வுகளை நடத்தியதற்காக டாக்டர் சஞ்சீவ்ஷ்ராப் என்னும் இந்திய விஞ்ஞானிக்கு அமெரிக்க இதய இயல் கழகத்தின் 'எஸ்டாப்ளிஷ்டு இன்வெஸ்டி கேட்டர்ஷிப்' என்னும் சிறப்பு விருது கிடைத்துள்ளது.

டாக்டர் சஞ்சீவ்ஷ்ராப் சிகாகோ நகரிலுள்ள மைக்கேல் ரீஸ் மருத்துவமனையில் ஆராய்ச்சி விஞ்ஞானியாகப் பணியாற்றுகிறார். இதயம் நல்ல நிலையில உள்ள போதும் பழுதடைந்த போதும் எவ்வாறு இயங்குகின்றது என்பதை வரையறுக்க ஏழு ஆண்டுகளுக்கும் மேலாக இவர் சிறப்பான ஆய்வுகளை நடத்தினார். இதய நோய்களை எளிதில் கண்டுபிடிப்பதற்கு இவரது ஆய்வுகள் உதவும். மாரடைப்பு எப்படி ஏற்படுகிறது என்பதைப் புரிந்துகொள்வதற்காக இதயத் தசைகளின் இயக்கம் பற்றியும் டாக்டர் ஷ்ராப் ஆய்வு நடத்தினார்.

இதய இயக்கம் பற்றிய ஆய்வுக்களுக்காக அமெரிக்கத் தேசிய சுகாதாரக் கழகமும் டாக்டர் ஷ்ராப்புக்கு மான்யம் வழங்கியுள்ளது; டாக்டர் கார்ல் வெபர் என்பாருடன் இணைந்து இதயம்பற்றிய இன்னோர் ஆய்வினை நடத்தவும் அக்கழகம் இவருக்கு மற்றொரு மான்யத்தினையும் அளித்துள்ளது.

## தமிழக சட்டத்திற்கு ஜனாதிபதி ஒப்புதல்

சென்னை, ஜூலை 16 தனியார்க் கல்லூரிகளை முறைப்படுத்தும் சட்ட முன் வடிவுக்கு ஜனாதிபதி அங்கீகாரம் அளித்துள்ளார். தவறான தனியார் கல்லூரி நிர்வாகத்தை அரசு எடுத்து நடத்தும் கால அளவை 6 ஆண்டில் இருந்து 10 ஆண்டுகளாக உயர்த்த இந்த சட்டம் வகை செய்கிறது.